# பரீட்சகர்களுக்கான பொது அறிவுறுத்தல்கள்

## 47 - இஸ்லாமிய நாகரிகம்

1. நீங்கள் பொறுப்பேற்றுள்ள இப்பணி மாணவர்களின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் ஒன்றாதலால் மிகப் பொறுப்புணர்ச்சியோடு நிறைவேற்ற வேண்டியதொன்றாகும்.

2. இப்பணியில் நீங்கள் மிக நேர்மையாக நடக்க வேண்டுமென்பது பரீட்சைகள் திணைக்களத்தின் எதிர்பார்ப்பாகும்.

3. இப்பணி, மறுமையில் அல்லாஹ்விடத்தில் பதில் சொல்ல வேண்டிய ஒரு செயல் என்பதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்வது உங்களது செயற்பாடுகளை நேர்மையாக முன்னெடுத்துச் செல்வதற்கு நிச்சயம் உதவும்.

4. **புள்ளித்திட்டம்**

   புள்ளித்திட்டம் பரீட்சகர்களிடையே ஒரு முகப்பாட்டை ஏற்படுத்துமாதலால், மாணவர்கள் நியாயமான முறையில் மதிப்பீடு செய்யப்படுவதற்காக, புள்ளித்திட்டத்தை முழுமையாகப் பின்பற்றுவது மிக அவசியமாகும்.

5. **அறிவுறுத்தல்கள்**

   பரீட்சைகள் திணைக்களம் முன்வைத்துள்ள அனைத்து அறிவுறுத்தல்களையும் பரீட்சகர்கள் முழுமையாகப் பின்பற்றுதல் அவசியமாகும்.

6. **விடைத்தாள் மதிப்பீடு**

   விடைத்தாள்களை மதிப்பிடும் பணியை ஆரம்பிக்க முன் ஒவ்வொரு வினாவுக்கும் மாணவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படும் விடை யாது என்பதை புள்ளித்திட்டத்தை நன்கு வாசித்து விளங்கிக் கொள்ளல் வேண்டும். மேலதிக விளக்கங்கள் தேவைப்படின் பிரதம கட்டுப்பாட்டாளர்/ பிரதம பரீட்சகரின் ஆலோசனையைப் பெற்றுக்கொள்ளலாம்.

7. **புள்ளி வழங்கும் ஒழுங்கு.**

   வினாப்பத்திரம் 01

   இதில் 50 வினாக்கள் உண்டு. ஒவ்வொரு வினாவுக்கும் 02 புள்ளிகள் வீதம் மொத்தம் 50 வினாக்களுக்கும் 100 புள்ளிகள் வழங்கப்படும்.

   வினாப்பத்திரம் 02

   இதில் பகுதி I பகுதி II என இரு பகுதிகள் உள்ளன. பகுதி I ஒவ்வொன்றும் ஐந்து பிரிவுகளைக் கொண்ட மூன்று வினாக்களை உள்ளடக்கியுள்ளது. பகுதி II ஒவ்வொன்றும் இரண்டு பிரிவுகளைக் கொண்ட ஐந்து வினாக்களை உள்ளடக்கியுள்ளது. பகுதி I ல் இரண்டு வினாக்களுக்கும், பகுதி II ல் மூன்று வினாக்களுக்கும் பரீட்சார்த்திகள் விடையளித்தல் வேண்டும். ஒவ்வொரு வினாவுக்கும் 20 புள்ளிகள் வழங்கப்படும்.

| புள்ளிகள் வழங்கப்படும் ஒழுங்கு | | |
|---|---|---|
| வினாப்பத்திரம் 01<br>50 வினாக்கள்,<br>தலா 02 புள்ளிகள் | 50 x 02 | 100 |
| வினாப்பத்திரம் 02<br>பகுதி I 02 வினாக்கள்<br>பகுதி II 03 வினாக்கள்<br>தலா 20 புள்ளிகள் | 02 x 20<br>03 x 20 | 40<br>60 |

## விடைத்தாள்களுக்குப் புள்ளியிடல் - பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன்பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற குமிழ்முனை பேனாவை பயன்படுத்தவும்.
2. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும்போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
3. இலக்கங்களை எழுதும்போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, சிற்றொப்பத்தை இடவும்.
4. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் □ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ..........................................................................................
..........................................................................................
.......................................................................................... ✓ $\frac{4}{5}$

(ii) ..........................................................................................
..........................................................................................
.......................................................................................... ✓ $\frac{3}{5}$

(iii) ..........................................................................................
..........................................................................................
.......................................................................................... ✓ $\frac{3}{5}$

(03) (i) $\frac{4}{5}$ + (ii) $\frac{3}{5}$ + (iii) $\frac{3}{5}$ = $\boxed{\frac{10}{15}}$

**பல்தேர்வு விடைத்தாள் (துளைத்தாள்)**

1. க.பொ.த.(உ. தர) மற்றும் தகவல் தொழிநுட்பப் பரீட்சைக்கான துளைத்தாள் திணைக்களத்தால் வழங்கப்படும். சரியாக துளையிடபட்டு அத்தாட்சிப்படுத்திய துளைத்தாள் தங்களுக்கு கிடைக்கப்பெறும். அத்தாட்சிப்படுத்திய துளைத்தாளைப் பயன்படுத்துவது பரீட்சகரின் கடமையாகும்.
2. அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்துவிட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.
3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை ✓ அடையாளத்தாலும் பிழையான விடையை ○ அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும். பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கக்கூடிய இடங்களில் ✓ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.
2. புள்ளிகளை ஓவலண்ட் கடதாசியின் இடது பக்கத்தில் குறிக்கவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன் பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக 2 இலக்கங்களில் பதியவும். வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டி விடவும்.
4. மொத்த புள்ளிகளை கவனமாக கூட்டி முன் பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் வழங்கப்பட்டுள்ள விடைகளுக்கான புள்ளியை மீண்டும் பரிசீலித்த பின் முன்னால் பதியவும். ஒவ்வொரு வினாக்களுக்கும் வழங்கப்படும் புள்ளிகளை உரிய விதத்தில் எழுதுவும்.

## புள்ளிப்பட்டியல் தயாரித்தல்

இம்முறை சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்படமாட்டாது. இது தவிர ஒவ்வொரு வினாப் பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதியப்பட வேண்டும். பத்திரம் I ற்கான பல்தேர்வு வினாப்பத்திரம் மட்டும் இருப்பின் புள்ளிகள் இலக்கத்திலும் எழுத்திலும் பதியப்பட வேண்டும். 51 சித்திரப் பாடத்திற்குரிய I, II, மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதிந்து எழுத்திலும் எழுதுதல் வேண்டும்.

o o o

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉස්ලාම් ශිෂ්ටාචාරය I
இஸ்லாமிய நாகரிகம் I
Islamic Civilization I

47 T I

05.08.2019 / 0830 – 1030

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

※ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
※ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
※ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
※ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** இஸ்லாமிய நாகரிகத்தின் அடிப்படைகளைக் கொண்ட தொகுதியினைத் தெரிவு செய்க.
(1) இபாதத், இமாரத், கிலாபத் (2) தௌஹீத், ரிஸாலத், மஆத் (3) இஸ்மத், இமாமத், விலாயத்
(4) வராஸத், வக்பு, ஸதகா (5) விலாயத், தஸ்கியத், ஹகீகத்

**2.** கலீபா உமர் பின் அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்களால் ஹதீஸ் துறையில் ஈடுபடுத்தப்பட்டவர்,
(1) இமாம் குதைபா பின் ஸஅத் ஆவார். (2) இமாம் ஸுலைமான் பின் ஹர்ப் ஆவார்.
(3) இமாம் ஷிஹாபுதீன் ஸுஹ்ரி ஆவார். (4) இமாம் ஈஸா பின் நஸ்ர் ஆவார்.
(5) இமாம் இஸ்ஹாக் பின் ராகவைஹி ஆவார்.

**3.** கியாஸின் அடிப்படைகளுள் **பர்உ** என்பதன் பொருள் யாது?
(1) சட்டம் (2) பொதுத்தன்மை (3) ஒப்பு நோக்குதல்
(4) ஏகோபித்த முடிவு (5) புதிய விடயம்

**4.** இலங்கையின் சந்தேச இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ள யொன்லிய எனும் பதத்தால் அடையாளப்படுத்தப்பட்டவர்கள்,
(1) இலங்கையின் பழங்குடியினர் ஆவர். (2) இந்துப் பெண்கள் ஆவர்.
(3) பௌத்தப் பெண்கள் ஆவர். (4) முஸ்லிம் பெண்கள் ஆவர்.
(5) இந்திய அரச பரம்பரையினர் ஆவர்.

**5.** வானியல் துறையில் 'ஸிஜ்', 'அல்-முஸ்தஉமல்' எனும் சொற்களால் குறிப்பிடப்படுபவை
(1) வானியல் கருவிகள் ஆகும். (2) வானியல் அட்டவணைகள் ஆகும்.
(3) வானியல் நிலையங்கள் ஆகும். (4) வானியல் ஆய்வு கூடங்கள் ஆகும்.
(5) நட்சத்திரங்கள் ஆகும்.

**6.** கீழே **X** நிரலில் நூலாசிரியர்களின் பெயர்களும் **Y** நிரலில் அவர்கள் எழுதிய நூல்களும் ஒழுங்கின்றித் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| 01. இமாம் அபூலைஸ் ஸமர்கந்தி | A - அல் பஹ்ருல் முஹீத் |
| 02. இமாம் ஷாபிஈ | B - அல்-உம்மு |
| 03. இமாம் பக்ருதீன் அர்-ராஸி | C - மபாதிகுல் கைப் |
| 04. இமாம் ஆலூஸி | D - றூஹுல் மஆனி |
| 05. இமாம் அபூஹையான் | E - பஹ்ருல் உலூம் |

**X** நிரலின் கீழுள்ள நூலாசிரியர்களின் பெயர்களுக்கேற்ப **Y** நிரலிலுள்ள அவர்கள் எழுதிய நூல்கள் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள சரியான விடையைத் தெரிவுசெய்க.
(1) B C D E A (2) B E C D A (3) E B C A D
(4) E B C D A (5) E C B D A

**7.** சமய நல்லிணக்கத்தைப் பேணும் விதத்தில் நபியவர்களுக்கும் பிற சமூகத்தவர்களுக்கும் இடையே இடம்பெற்ற ஒரு நிகழ்வு
(1) ஹுதைபிய்யா உடன்படிக்கை ஆகும்.
(2) ஹில்புல் புழூல் நிகழ்வு ஆகும்.
(3) அகபா உடன்படிக்கை ஆகும்.
(4) நஜ்ரான் மக்களுடனான ஒப்பந்தம் ஆகும்.
(5) கஅபாவில் 'ஹஜருல் அஸ்வத்' வைத்தல் ஆகும்

**8.** **முஇஸ்ஸுத் தௌலா** எனும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்ட ஆட்சியாளர்கள் பிரதிநிதித்துவப்படுத்திய சிற்றரசு
(1) புவைதிகள் (2) ஸபவியர் (3) ஸெல்ஜுக்கியர் (4) பாத்திமீக்கள் (5) ஐயூபியர்

**9.** குடும்ப நிர்வாகம் தொடர்பில் இஸ்லாமிய வழிகாட்டலாக அமைவது யாது?
(1) குடும்பத் தலைமை ஆண்களுக்கு உரியதாக இருப்பினும், பெண்களின் கருத்தை அறிவது அவசியமானதாகும்.
(2) குடும்பத் தலைமையில் பெண்களுக்கு எத்தகைய பங்கும் கிடையாது.
(3) குடும்ப விடயத்தில் மனைவியின் கருத்தைக் கோருவது கணவனுக்கு அவசியமானதல்ல.
(4) மனைவியின் கருத்தை அறிந்ததன் பின் அதற்கு எதிர்மாறாக நடந்துகொள்வதே சிறந்ததாகும்.
(5) உழைப்பில் ஈடுபடுவது ஆண்களைச் சார்ந்தது. குடும்பத்தைப் பராமரிப்பது பெண்களைச் சார்ந்தது.

**10.** "பெரும்பாவம் செய்த எவருக்கும் நபியவர்களது ஷபாஅத்தைப் பெற முடியாது." என்ற கருத்தை முன்வைத்த சிந்தனைப் பிரிவு யாது?
(1) அல்-அஷ்அரிய்யா (2) அல்-முர்ஜிஆ (3) அல்-முஃதஸிலா
(4) அல்-ஜபரிய்யா (5) அல்-கவாரிஜ்

**11.** கண்டி இராஜதானியின் நிர்வாக ஒழுங்கில் முஸ்லிம்கள் பணி செய்த **மடிகே பத்த** என்ற சொல் குறிக்கும் திணைக்களம்
(1) சமையல் பகுதி (2) பாதுகாப்பு (3) மருத்துவம்
(4) கால்நடை பராமரிப்பு (5) மீன்பிடி, போக்குவரத்து

**12.** "உங்களுடைய மார்க்கம் உங்களுக்குரியது என்னுடைய மார்க்கம் எனக்குரியது" என்ற அல்-குர்ஆன் வசனம் உணர்த்தும் சரியான கருத்து யாது?
(1) ஒவ்வொருவருக்கும் அவரவரது மார்க்கத்தைப் பின்பற்றும் பூரண உரிமை உண்டு.
(2) எவருக்கும் தனது சமய நம்பிக்கையைச் சந்தர்ப்ப, சூழலுக்கேற்ப விட்டுக்கொடுக்க முடியும்.
(3) இஸ்லாத்தை எடுத்துரைப்பது ஒவ்வொரு முஸ்லிமினதும் கடமையாகும்.
(4) எவருக்கும், அடுத்தவர் சமய நம்பிக்கையில் தலையிட முடியும்.
(5) சமய நம்பிக்கைகள் நிலையானவை அல்ல. அடிக்கடி மாற்றத்திற்கு உட்படுபவை.

**13.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - விஞ்ஞானத் துறைகளில் ஐரோப்பாவின் எழுச்சிக்குக் காரணமாக அமைந்தவர்கள் ஸ்பெய்ன் முஸ்லிம்களாவர்.
B - நாடுகாண் பயணி வஸ்கொடகாமாவுக்கு இந்தியா வந்தடைய வழிகாட்டியாக இருந்தவர் இப்னு மஜீத் ஆவார்.
C - ஸ்கண்டிரியாவில் அமைக்கப்பட்டிருந்த வானிலை அவதான நிலையம் உலகின் முதல் வானிலை அவதான நிலையமாகும்.
D - மஞ்சனீக், தபாபா போன்ற யுத்தக்கருவிகளை முஸ்லிம்களே முதலில் அறிமுகப்படுத்தியுள்ளனர்.
மேற்குறித்தவற்றுள் சரியான கூற்றுக்களைக் கொண்ட தெரிவு யாது?
(1) A, B (2) B, C (3) C, D (4) A, B, C (5) B, C, D

**14.** **மஸ்லஹா** அடிப்படையில் பெறப்பட்ட தீர்வுக்கான ஒரு உதாரணம் யாது?
(1) உமர்(ரலி) காலத்தில் குதிரைகள்மீது விதிக்கப்பட்ட ஸகாத் வரி
(2) நாய் நக்கிய பாத்திரத்தை ஏழு தடவைகள் கழுவுவது போல, பன்றி நக்கிய பாத்திரத்தையும் ஏழு தடவைகள் கழுவுவது
(3) மதுவுக்கு வழங்கப்பட்டுள்ள 'ஹராம்' என்ற தீர்ப்பையே போதைப் பொருட்கள் அனைத்துக்கும் தீர்ப்பாகக் கொள்வது
(4) பெண்களுக்கு தங்கம் ஹலாலானது என்ற தீர்ப்பு
(5) அபூபக்கர் (ரலி) அவர்கள் அல்-குர்ஆனை ஒன்று திரட்ட எடுத்த நடவடிக்கை

**15.** இலங்கைக்குச் சுதந்திரம் கிடைக்கும் விவகாரத்தில் நாட்டு நலனை முன்னிலைப்படுத்தி தனது கருத்தை வலியுறுத்திய பிரமுகர்,
(1) சேர் ராஸிக் பரீத் ஆவார்.
(2) ஏ.எம்.ஏ. அஸீஸ் ஆவார்.
(3) கலாநிதி பதியுதீன் மஹ்மூத் ஆவார்.
(4) துவான் புர்ஹானுதீன் ஜாயா ஆவார்.
(5) டாக்டர் எம். ஸி. எம். கலீல் ஆவார்.

**16.** அல்-குர்ஆனை நூலுருப்படுத்துவதற்காக உஸ்மான் (ரலி) அவர்களால் நியமிக்கப்பட்ட குழுவின் அங்கத்தவர்களுள் ஒருவராக இருந்தவர்
(1) உபை பின் கஅப் (ரலி)
(2) அபூ குஸைமா (ரலி)
(3) அபூ தர்தா (ரலி)
(4) ஹுதைபதுல் யமானி (ரலி)
(5) ஸஃத் பின் ஆஸ் (ரலி)

**17.** பின்வருவனவற்றுள் மிகச் சரியான கூற்றினைத் தெரிவுசெய்க.
(1) இஸ்லாமிய நாகரிகம் மறுமை வெற்றியை இலக்காகக் கொண்டுள்ளது.
(2) அல்-குர்ஆனின் மீதான முஸ்லிமின் முதற் கடமை அதனை ஓதுவது மட்டுமாகும்.
(3) 'இஸ்ராயீலிய்யாத்' என்பது தப்ஸீருடன் புகுத்தப்பட்ட கட்டுக்கதைகளைக் குறிக்கின்றது.
(4) மனித வாழ்வுக்கான வழிகாட்டலை வழங்க மனித அறிவு மட்டும் போதுமானது.
(5) 'ஜாமிஉல் குர்ஆன்' எனும் சிறப்புப் பெயர் ஸைத் பின் ஸாபித் (ரலி)க்கு உரியதாகும்.

**18.** பின்வருவனவற்றைக் கருதுக.
A - அரேபியர் ஒதுக்கப்படல்
B - துருக்கியர் செல்வாக்கு
C - சிற்றரசுகளின் தோற்றம்
D - பைதுல் மால் துஷ்பிரயோகம்
E - வாரிசுகளின் ஒழுங்கீனம்
F - கர்பலா நிகழ்வு
G - அஹ்லுல் பைத்களுக்கே ஆட்சியுரிமை
மேலுள்ளவற்றுள் அப்பாஸியர் வீழ்ச்சிக்கு வழியமைத்த காரணிகளை கொண்ட விடையைத் தெரிவுசெய்க.
(1) A, C, E (2) A, E, F (3) B, C, F (4) B, D, G (5) E, F, G

**19.** **ஆலமுல் பர்ஸக்** என்பதன் கருத்து
(1) மீள் எழுப்பப்படுவது
(2) கருவறை வாழ்வு
(3) மறுமை வாழ்வு
(4) மண்ணறை வாழ்வு
(5) சுவன வாழ்வு

**20.** கீழே **X** நிரலில், இஸ்லாமிய சீர்திருத்தத்துடன் தொடர்புடைய ஆளுமைகள் சிலரது பெயர்களும் **Y** நிரலில், அவ்வாளுமைகளோடு நெருக்கமாக அமைகின்ற விடயங்களும் ஒழுங்கின்றித் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| 1. மௌதூதி (ரஹ்) | A - இக்வானுல் முஸ்லிமீன் |
| 2. இல்யாஸ் (ரஹ்) | B - தீனே இலாஹி மறுதளிப்பு |
| 3. அஹ்மத் ஸிர்ஹிந்த் (ரஹ்) | C - உயைனா |
| 4. ஹஸனுல் பன்னா (ரஹ்) | D - தர்ஜுமானுல் குர்ஆன் |
| 5. முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் (ரஹ்) | E - காந்தலா |

**X** நிரலுக்கேற்ற விதத்தில் **Y** நிரலில் உள்ள விடயங்களைப் பொருத்தமாக ஒழுங்குபடுத்தினால் அமையும் சரியான சேர்மானத்தைத் தெரிவுசெய்க
(1) A B C D E
(2) B D A C E
(3) B D E A C
(4) D B A E C
(5) D E B A C

**21.** **அல்-முஹ்கம்** என்பதன் கருத்து யாது?
(1) மாற்றத்துக்கு உட்படுத்தப்பட்ட அல்-குர்ஆன் வசனங்கள்
(2) பல பொருளைக் கொடுக்கும் அல்-குர்ஆன் வசனங்கள்
(3) மீட்டி, மீட்டிச் சொல்லப்பட்ட அல்-குர்ஆன் வசனங்கள்
(4) மக்கீ-மதனீ சூராக்களை அடையாளப்படுத்தும் அல்-குர்ஆன் வசனங்கள்
(5) ஒரே பொருளைத் தரும் திட்டவட்டமான அல்-குர்ஆன் வசனங்கள்

**22.** கருத்து வேறுபாடு என்ற விடயத்தில் "இமாம்களிடையே கருத்தொற்றுமை நிலவிய விடயங்களில் நாம் பரஸ்பரம் ஒத்துழைப்போம், கருத்து வேறுபாடு கொண்ட விடயங்களில் பரஸ்பரம் நியாயம் காண முயற்சிப்போம்" என்று கருத்துரைத்தவர்,
(1) முஸ்தபா அஹமத் ஷர்கா ஆவார்.
(2) அஹமத் அர் ரைஸுனி ஆவார்.
(3) இமாம் ரஷீத் ரிழா ஆவார்.
(4) முஸ்தபா பின் கராமா ஆவார்.
(5) மௌலானா அபுல்ஹஸன் அலி நத்வி ஆவார்.

**23.** அல்-குர்ஆன் கணவன்-மனைவிக்கு இடையிலான பரஸ்பர உறவை எப்பொருளுக்கு உவமையாகக் குறிப்பிட்டுள்ளது?
(1) ஆடை (2) இல்லம் (3) உணவு (4) கற்பு (5) வாகனம்

**24.** கீழே **X** நிரலில் ஸஹாபாக்களின் பெயர்களும் **Y** நிரலில் அவர்களுடன் தொடர்புபட்ட சில நிகழ்வுகளும் ஒழுங்கின்றித் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| 1. ஜஃபர் பின் அபீதாலிப் (ரலி) | A - அகழி யுத்தத்தின்போது ஆலோசனை நல்கியவர் |
| 2. முஸ்அப் பின் உமைர் (ரலி) | B - மதீனாவுக்கு அனுப்பப்பட்ட பிரசாரகர் |
| 3. மஆத் பின் ஜபல் (ரலி) | C - ஹுதைபிய்யா உடன்படிக்கையை முஸ்லிம்கள் தரப்பில் எழுதியவர் |
| 4. அலி பின் அபீ தாலிப் (ரலி) | D - அபீசீனியாவுக்கான ஹிஜ்ரத் |
| 5. ஸல்மான் பாரிஸி (ரலி) | E - யெமனுக்கு ஆளுனராக அனுப்பப்பட்டவர் |

**X** நிரலுக்கேற்ப **Y** நிரலில் உள்ள விடயங்கள் பொருத்தமான வகையில் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள சேர்மானத்தைத் தெரிவுசெய்க.
(1) A B C D E (2) A C D E B (3) D B E C A
(4) D C B A E (5) E A B C D

**25.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A. நபியவர்கள் காலம் முதலே இலங்கையில் ஹாஸிமீக்கள் காணப்பட்டனர் என்று 'புதூஹுல் புல்தான்' என்ற நூல் குறிப்பிடுகின்றது.

B. இலங்கை மன்னன் அக்ரபோதி இஸ்லாம் பற்றி அறிந்து வர, நபி முஹம்மத் (ஸல்) அவர்களிடம் தனது தூதுவர் ஒருவரை அனுப்பினான் என இப்னு ஸஹ்ரயார் குறிப்பிடுகின்றார்.

C. பொலன்னறுவை இராஜதானியில் மன்னனின் ஆலோசகர்களாக நான்கு முஸ்லிம்கள் பணியாற்றியதாகக் குறிப்பிடப்படும் கருத்தை பேராசிரியர் எஸ். பரணவிதாரண ஏற்றுக்கொண்டுள்ளார்.

D. இலங்கை மன்னனால் கலீபா வலித் அவர்களுக்கு அனுப்பப்பட்ட அன்பளிப்புப் பொருட்கள், இந்திய மன்னன் ஒருவனால் கொள்ளையிடப்பட்டமையே சிந்து நோக்கிய முஸ்லிம்களின் படையெடுப்புக்குக் காரணமாக அமைந்தது என அல் - இத்ரீஸி கருத்துத் தெரிவித்துள்ளார்.

மேற்குறித்தவற்றுள் சரியான கூற்றினை / கூற்றுக்களைக் கொண்ட தெரிவு யாது?
(1) D (2) A, B (3) B, C (4) C, D (5) B, C, D

**26.** பின்வருவனவற்றுள் மிகச் சரியான கூற்றைத் தெரிவு செய்க.
(1) நபிமார்கள் வரலாற்றிலே 'தீன்' எப்போதும் ஒன்றாக இருக்க, 'ஷரீஅத்' மாற்றத்திற்கு உட்பட்டுள்ளது.
(2) பாத்திமீக்கள், பக்தாதைத் தமது தலைநகராகக் கொண்டிருந்தனர்.
(3) 'மங்கா' வின் 'சித்தாந்த' என்ற வானியல் நூலை, அபூமஃஷர் என்பவர் அறபியில் மொழிபெயர்த்தார்.
(4) மன்னன் மகா பராக்கிரமபாகுவின் பிரதிநிதியாகவே, அபூ உஸ்மான் எகிப்துக்குத் தூதுவராக அனுப்பப்பட்டார்
(5) ஹதீஸ்களைத் தரம் பிரித்துப் பார்க்கும் மரபு ஸஹாபாக்கள் காலம் முதலே வழக்கில் இருந்துள்ளது.

**27.** இலங்கை - அரேபியர் உறவு தொன்மையாகவும் இலங்கையில் இஸ்லாத்தின் அறிமுகத்தில் அரேபிய முஸ்லிம் வர்த்தகர்களின் ஈடுபாடு பலமானதாகவும் இருந்தபோதிலும், இலங்கை முஸ்லிம்களிடையே அரேபிய முஸ்லிம் கலாசாரம் **நிலைபெறாமைக்கான** மிகப் பொருத்தமான காரணம்
(1) அரேபியர், இலங்கையைத் தற்காலிக இருப்பிடமாக மட்டுமே வைத்துக்கொண்டமை
(2) வர்த்தகத்தில் ஈடுபாடு காட்டிய அரேபியர்கள் தமது கலாசார, பாரம்பரியங்களை அறிமுகப்படுத்துவதில் ஆர்வம் காட்டாமை
(3) அரேபியர்களைத் தொடர்ந்து இலங்கையில் தென்னிந்திய முஸ்லிம்களின் செல்வாக்கு பலமடைந்து, அவர்களின் செயற்பாடுகள் சமய செயற்பாடுகளாக முன்னிலைப்படுத்தப்பட்டமை
(4) இலங்கை முஸ்லிம்கள் காலனித்துவ ஆட்சியின்போது சமய, சமூகத்துறைகளில் அடக்கியொடுக்கப்பட்டமை
(5) அறபு மொழியிலமைந்த இஸ்லாமிய அறிவுக் கருவூலங்களில் இலங்கை முஸ்லிம்கள் பரிச்சியம் அடையாமை

**28.** உலகம் உருண்டையானது என்பதைக் கண்டறிந்து, அதன் சுற்றளவைக் கணிப்பதற்கு வாய்ப்பாடொன்றை முதன் முதலில் அறிமுகப்படுத்திய முஸ்லிம் அறிஞர்,
(1) அல்-பிரூனி என்பவராவார். (2) அல்-ஹுவாரிஸ்மி என்பவராவார்.
(3) அல்-முகத்தஸி என்பவராவார். (4) மாஷா அல்லாஹ் என்பவராவார்.
(5) அபூ ஸஈத் அஸ்-ஸன்ஜரி என்பவராவார்.

**29.** அறபு நாட்டில் யூத மதம் அறிமுகமாவதற்குக் காரணமாக இருந்த குழுவினர்
(1) நுழைர், குறைஷ், ஸகீப் (2) நுழைர், குறைஷ், குரைழா (3) குறைஷ், கைனுகா, ஸகீப்
(4) கைனுகா, ஸகீப், குறைஷ் (5) குரைழா, கைனுகா, நுழைர்

**30.** பின்வருவனவற்றுள் அறிஞர் சித்திலெப்பையினால் எழுதப்பட்ட நூல்
(1) இறையும் மறையும் (2) அஸன்பே சரித்திரம் (3) சாந்தி மார்க்கம்
(4) தொழுகை அடவு (5) பத்ஹுத் தயான்

**31.** இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் பாதுகாப்புக்காக முதன் முதலில் கடற்படையை நிறுவியவர்,
(1) கலீபா முஆவியா (ரலி) ஆவார். (2) கலீபா ஹாறூன் அல்-றஷீத் ஆவார்.
(3) கலீபா மஃமூன் ஆவார். (4) கலீபா உஸ்மான் (ரலி) ஆவார்.
(5) கலீபா வலீத் பின் அப்துல் மலிக் ஆவார்.

**32.** **ஸின்தீக்கள்** எனப்படுவோர் யாவர்?
(1) ஹதீஸ் அறிவிப்பாளர்கள் (2) இஸ்லாத்தின் எதிரிகள் (3) ஹனீப்கள்
(4) பைஸாந்தியர் (5) நாஸ்திகர்

**33.** பின்வருவன முஸ்லிம் சமூகத்தினரிடையே வழக்கில் இருந்து வரும் சில சொற்களாகும்.
A - தஸ்கியா E - ஷெய்கு
B - முரீத் F - ஹழரா
C - இல்லத் G - இஸ்மத்
D - முகல்லித் H - அவுராத்

மேலுள்ளவற்றுள் **தஸவ்வுப்புடன்** தொடர்புபடும் சொற்கள் கொண்ட விடையைத் தெரிவுசெய்க.
(1) A, B, E, F, H (2) A, C, E, G, H (3) A, D, E, F, H
(4) B, C, D, E, F (5) C, E, F, G, H

**34.** பின்வருவன நாகரிகங்கள் தொடர்பான சில கூற்றுகளாகும்.

A - மெசபொதேமிய நாகரிகம் ஈராக்கின் பபிலோனியாவைத் தலைநகரமாகக் கொண்டிருந்தது.
B - பிர்அவ்ன்களின் ஆட்சி இடம்பெற்ற எகிப்தில் அரசர்கள் தெய்வ வழித்தோன்றலாகக் கருதப்பட்டனர்.
C - இம்மை, மறுமை இரண்டினதும் வெற்றிக்கான வழிகாட்டல்களை இஸ்லாமிய நாகரிகம் கொண்டுள்ளது.
D - உரோம நாகரிகத்தின் அறிவியற் துறைக்கான பங்களிப்பை நல்கியவர்களாக சோக்ரடீஸ், அரிஸ்டோட்டில், பிளேட்டோ ஆகியோர் கருதப்படுகின்றனர்.
E - பாப்பரசர் இரண்டாம் சில்வெஸ்டர், ஸ்பெய்னில் தங்கியிருந்து இஸ்லாமிய நாகரிகம் தொடர்பாகக் கற்றுத் தேர்ந்து, தன் நாடு திரும்பிய அவர் அவற்றைத் தன் மக்களிடம் முன்வைத்தபோது, மக்களால் இன்முகத்துடன் வரவேற்கப்பட்டார்.

மேற்குறித்தவற்றுள் சரியான கூற்றினை / கூற்றுக்களைக் கொண்ட தெரிவு யாது?

(1) C (2) E (3) B, D (4) A, B, E (5) A, C, E

**35.** **X**, **Y** எனும் நிரல்களின் கீழ் சில தகவல்கள் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் உள்ளவை **X** நிரலில் உள்ளவற்றுடன் ஏதேனும் ஒரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை ஒழுங்கின்றிக் காணப்படுகின்றன.

| X | Y |
|---|---|
| 01. த∴விலுல் அஹ்காம் | A - தெளிவான சட்டம் |
| 02. இபாரதுன்னஸ் | B - தெளிவான சட்டத்திலிருந்து பெறப்படும் மறைமுக சட்டங்கள் |
| 03. ஸபபுன் நுஸுல் | C - சட்டங்களுக்கான காரணங்களைத் தெளிவுபடுத்தல் |
| 04. இஷாரதுன்னஸ் | D - அல்-குர்ஆன் வசனங்கள் இறக்கப்பட்டமைக்கான காரணங்கள் |
| 05. இக்திலா உன்னஸ் | E - தெளிவான சட்டத்திலிருந்து பெறப்படும் முடிவுகள் |

**X** நிரலுக்கேற்ப **Y** நிரலில் உள்ள விடயங்கள் பொருத்தமான வகையில் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள சேர்மானத்தைத் தெரிவு செய்க.

(1) A B C D E (2) B C A E D (3) C A D B E
(4) C A D E B (5) D E C A B

**36.** பின்வருவனவற்றைக் கருதுக.

A - ரப்பானிய்யத்
B - முல்கிய்யத்
C - உமூமிய்யா
D - ஸுமூலிய்யா
E - அக்லிய்யா
F - வாகிஇய்யா
G - ஹாகிமிய்யா

மேலுள்ளவற்றுள் இஸ்லாமிய ஷரிஆவின் பண்புகளைக் குறிக்கும் விடையினைத் தெரிவுசெய்க.

(1) A, B, D, E (2) A, C, D, F (3) A, C, F, G
(4) B, C, D, E (5) B, D, F, G

**37.** நபியவர்கள் மதீனாவில் தனது அரசை நிறுவியதும் வேறுபட்ட காலப்பகுதிகளில் வெவ்வேறான குழுக்களுடன் ஒப்பந்தங்களை மேற்கொண்டார்கள். இதற்கான பிரதான காரணம்

(1) எதிரிகள் தன்னை பகைத்து விடலாம் என்ற அச்சம்
(2) கட்டாயமாக யுத்தநிறுத்தத்தை ஏற்படுத்தி மறைமுகமாகத் தன்னைப் பலப்படுத்திக் கொள்ளும் யுத்த தந்திரம்
(3) எதிரிகளின் எதிர்ப்பைத் தடைப்படுத்தித் தனது பணியான த∴வாவை முன்கொண்டு செல்லல்
(4) வாக்குறுதி பேணல் என்ற பண்பைப் பலப்படுத்தி மக்களிடையே அச்சமற்ற சூழலை ஏற்படுத்தல்
(5) யுத்தத்தினூடாக மனித உயிர்களை வெற்றிகொள்வதை விட உடன்படிக்கையூடாக வெற்றிகொள்ளும் முயற்சி

**38.** துருக்கிய இஸ்லாமிய கிலாபத் வீழ்ச்சிக்குக் காரணமாக அமைந்தவர்,
(1) பிரடெரிக் மன்னன் ஆவார். (2) சார்ள்ஸ் மன்னன் ஆவார். (3) ஹுலாகுகான் ஆவார்.
(4) முஸ்தபா கமால் ஆவார். (5) மூன்றாம் பிலிப் ஆவார்.

**39.** **காலித் பின் பகாயா** என்ற பெயரிலான கல்வெட்டு, இலங்கையின் எந்தப் பகுதியில் அமையப்பெற்ற முஸ்லிம் குடியேற்றத்துக்கு ஆதாரமாக அமைகின்றது?
(1) வெலிகம (2) கொழும்பு (3) பேருவளை
(4) புத்தளம் (5) திருகோணமலை

**40.** கீழே **X** நிரலில் ஹதீஸ் துறையோடு தொடர்புடைய இமாம்களின் இயற்பெயர்களும் **Y** நிரலில் அவர்கள் மக்களிடையே பிரபல்யம் பெற்ற பெயர்களும் ஒழுங்கின்றித் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| 01. முஹம்மது இப்னு இஸ்மாயில் | A - அந்நஸாயி |
| 02. முஸ்லிம் பின் ஹஜ்ஜாஜ் | B - அபூதாவூத் |
| 03. ஸுலைமான் பின் அஸ்அஸ் | C - திர்மிதி |
| 04. முஹம்மத் பின் ஈஸா | D - முஸ்லிம் |
| 05. அபூ அப்துர் ரஹ்மான் அஹமத் பின் ஸுஐப் | E - புஹாரி |

**X** நிரலில் குறிப்பிடப்பட்டுள்ள இமாம்களின் இயற்பெயர்களுக்கமைய **Y** நிரலை ஒழுங்குபடுத்தினால் அமையும் சரியான விடைத் தொகுதியினைத் தெரிவுசெய்க
(1) A C D E B (2) A C B E D (3) A D E C B
(4) E B A C D (5) E D B C A

**41.** **மகாஸிதுஷ் ஷரிஆவின்** மூன்று பிரதான படிநிலைகளையும் காட்டும் தொகுதியினைத் தெரிவுசெய்க.
(1) இபாதத், இமாரத், கிலாபத் (2) இபாதத், முஆமலாத், ஜினாயாத்
(3) இமாமத், தகீய்யத், இஸ்மத் (4) தஸ்கிய்யத், தரீக்கத், ஸலாமத்
(5) ழரூரிய்யாத், காஜிய்யாத், தஹ்ஸீனிய்யாத்

**42.** இஸ்லாமிய வழக்கில் **தஜ்தீத்** எனும் பதம் சுட்டும் கருத்து
(1) நவீன சிந்தனைக்கேற்ப இஸ்லாத்தை வடிவமைத்தல்
(2) சமூகத்தில் எழும் பிரச்சினைகளுக்கு இஸ்லாமிய வழிகாட்டலில் தீர்வு காணுதல்
(3) இஸ்லாத்தில் கலந்துள்ள இஸ்லாமல்லாதவற்றை நீக்கி, இஸ்லாத்தை அதன் ஆரம்ப நிலைக்கு மீட்டெடுத்தல்
(4) இஸ்லாமிய வணக்க வழிபாடுகளில் புதிய விடயங்களைச் சேர்த்தல்
(5) நபி முஹம்மத் (ஸல்) அவர்களின் முன்மாதிரிகளை வாழ்வில் பின்பற்றி நடத்தல்

**43.** அல்-குர்ஆனின் முதல் வசனம் நபியவர்களை வந்தடைந்த சரியான ஒழுங்கு யாது?
(1) லவ்ஹுல் மஹ்பூல் → பைதுல் இஸ்ஸா → ஜிப்ரயில் (அலை) → ஹிராக் குகை
(2) லவ்ஹுல் மஹ்பூல் → பைதுல் இஸ்ஸா → ஜிப்ரயில் (அலை) → ஸௌர்க் குகை
(3) பைதுல் இஸ்ஸா → லவ்ஹுல் மஹ்பூல் → ஜிப்ரயில் (அலை) → ஹிராக் குகை
(4) பைதுல் இஸ்ஸா → லவ்ஹுல் மஹ்பூல் → ஜிப்ரயில் (அலை) → ஸௌர்க் குகை
(5) ஜிப்ரயில் (அலை) → பைதுல் இஸ்ஸா → லவ்ஹுல் மஹ்பூல் → ஸௌர்க் குகை

**44.** "வெள்ளிக்கிழமைகளில் ஜும்ஆ நேரத்தில் வர்த்தகம் செய்யக்கூடாது" என்ற சட்டத்தில் **'மகாஸிதுஷ் ஷரீஆ'** ஆகக் கணிக்கப்படும் விடயம் யாது?
(1) வெள்ளிக்கிழமைகளில் வர்த்தகம் செய்யலாகாது.
(2) ஜும்ஆ நேரத்தில் வர்த்தகத்திலிருந்து ஒதுங்கியிருந்து, ஏனைய நேரங்களில் வர்த்தகத்தில் மும்முரமாக ஈடுபட வேண்டும்.
(3) வணக்க வழிபாடுகளுக்குத் தடையாக வர்த்தகமோ, ஏனைய எதுவுமோ அமையலாகாது.
(4) ஜும்ஆத் தொழுகையில் கட்டாயம் கலந்துகொள்வதுடன், ஜும்ஆ நிறைவடைந்ததும், வேகமாகச் சென்று வர்த்தகம் செய்ய வேண்டும்.
(5) ஜும்ஆவில் விருப்பமுள்ளவர்கள் அதில் கலந்து கொள்ளலாம், ஏனையோர் தத்தம் விருப்பப்படி வர்த்தகம் செய்து விட்டு, ளுஹர் தொழுகையை நிறைவேற்றிக் கொள்ளலாம்.

**45.** பின்வருவனவற்றுள் **இஜ்மாஉஸ்ஸரீஹ்** தொடர்பான சரியான கூற்று,
(1) இஜ்மாஉஸ்ஸரீஹ், இஜ்மாஉ அக்ஸரிய்யா ஆகிய இரண்டும் ஒரே கருத்தைக் கொண்டவையாகும்.
(2) இஜ்மாஉஸ்ஸரீஹ் என்பது இஜ்மாஉஸ்ஸுகூத்திக்கு முரண்பட்டது.
(3) இஜ்மாஉஸ்ஸரீஹ் ஏற்பட குறிப்பிட்ட காலத்தில் உயிர்வாழும் முஜ்தஹித்கள் அனைவரும் கருத்துப் பரிமாற வேண்டும்.
(4) இஜ்மாஉஸ்ஸரீஹ் ஏற்பட ஆஹாதான ஹதீஸ்களை விட முதவாதிரான ஹதீஸ்களே ஆதாரமாக அமைதல் வேண்டும்.
(5) இஜ்மாஉஸ்ஸரீஹ், முதவாதிர் தரத்திலான ஹதீஸ்களுக்குச் சமமானது.

- **46** தொடக்கம் **50** வரையிலான ஒவ்வொரு வினாவிலும் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. அக்கூற்றுகள் பற்றிய மிகப் பொருத்தமான தொடர்பைக் காட்டும் சரியான விடையினைப் பின்வரும் அட்டவணையிலுள்ள இலக்கம் (1), (2), (3), (4), (5) என்பவற்றிலிருந்து தெரிவுசெய்க.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது | சரியானது |
| (2) | சரியானது | பிழையானது |
| (3) | பிழையானது | பிழையானது |
| (4) | பிழையானது | சரியானது |
| (5) | சரியானது | சரியானதாக இருப்பதுடன் முதல் கூற்றை மேலும் விபரிக்கின்றது |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **46.** | ஒரு சமூகத்தில் பெரும்பாலானோர் தமது வாழ்வில் சொல், செயல் ரீதியாகப் பின்பற்றிவரும் மரபுகள் 'உர்பு' எனப்படுகின்றன. | த.'.வாப் பணியை இலகுபடுத்துவதுடன் மனதைத் திடமாக வைப்பதும், அல்-குர்ஆன் ஒரே தடவையில் முழுமையாக அருளப்படாமைக்குரிய காரணமொன்றாகக் கருதப்படுகிறது. |
| **47.** | "தஜ்லா நதிக்கரையில் ஒரு ஆட்டுக்குட்டி சரிந்து விழுந்தாலும் அதற்குப் பதில் கூறுவதும் எனது பொறுப்பாகும்" என ஆட்சியாளனின் பொறுப்பை எடுத்துக்காட்டியவர் உமர் (ரலி) ஆவார்கள். | ஹிஜ்ரி 9 ஆம் ஆண்டில் ஹஜ் விதியாக்கப்பட்டபோது ஹாஜிகள் குழு நபியவர்களின் தலைமையிலேயே மக்கா நோக்கிப் பயணமானார்கள். |
| **48.** | அக்ரப், அத்தைர், நாதிர் போன்றன முஸ்லிம் வானிலை அறிஞர்களால் நட்சத்திரங்கள் சிலவற்றுக்கு வைக்கப்பட்ட பெயர்களாகும். | ஷீஆக்களிடையே மிகக் கூடிய எண்ணிக்கையும் செல்வாக்கும் கொண்டவர்கள் இஸ்மாஈலிய்யா பிரிவினராவர். |
| **49.** | உமையாக் காலத்தில் அறபு எழுத்தணிக்கலை வளரச்சிக்கு இஸ்ஹாக் மற்றும் வஹ்ஹாப் எனும் சகோதரர்கள் பெரும் பங்களிப்புச் செய்துள்ளனர். | முஸ்லிம்களும் யூதர்களும் தத்தம் சமயத்தை முழுமையாகப் பின்பற்றலாம். என்ற விதியை மதீனா சாசனத்தில் கண்டுகொள்ள முடியும். |
| **50.** | ஸஹாபாக்கள் காலத்தில் அல்-குர் ஆனிலிருந்து மட்டுமே இஜ்திஹாத் மேற்கொள்ளப்பட்டுள்ளது எனக் குறிப்பிடுவது தவறாகும். | நபிமார்கள், ரஸூல்மார்களின் வருகை முற்றுப் பெற்றுள்ளவாறு முஜ்தஹித்களின் வருகையும் முற்றுப் பெற்றதாகவே உள்ளது. |

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

# අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம்

විෂය අංකය / பாட இலக்கம்: **47**

විෂයය / பாடம்: **இஸ்லாமிய நாகரிகம்**

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

## I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 01. | 2 | 11. | 5 | 21. | 5 | 31. | 4 | 41. | 5 |
| 02. | 3 | 12. | 1 | 22. | 3 | 32. | 2 | 42. | 3 |
| 03. | 5 | 13. | 5 | 23. | 1 | 33. | 3 | 43. | 1 |
| 04. | 4 | 14. | 5 | 24. | 3 | 34. | 1 | 44. | 3 |
| 05. | 2 | 15. | 4 | 25. | 3 | 35. | 4 | 45. | 2 |
| 06. | 4 | 16. | 5 | 26. | 1 | 36. | 2 | 46. | 1 |
| 07. | 4 | 17. | 3 | 27. | 3 | 37. | 5 | 47. | 2 |
| 08. | 1 | 18. | 1 | 28. | 1 | 38. | 4 | 48. | 2 |
| 09. | 1 | 19. | 4 | 29. | 5 | 39. | 2 | 49. | 4 |
| 10. | 3 | 20. | 5 | 30. | 2 | 40. | 5 | 50. | 2 |

❂ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 02 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 2 × 50 = 100

# பகுதி I

**வினா இல: (01)**

1. (i) நபியவர்களுக்கு, அல்-குர்ஆன் பகுதி பகுதியாக அருளப்பட்டமைக்கான காரணங்கள் **நான்கினைத்** தருக.

- நபியவர்களின் உள்ளத்தை உறுதிப்படுத்தல்.
- மனனம் செய்து பாதுகாப்பதற்கு இலகுபடுத்தல்.
- சமூகமற்றத்தைப் படித்தர விருத்திக்கேற்ப கட்டம்கட்டமாக கட்டியெழுப்புதல்.
- நபியவர்களிடம் வினவப்பட்ட வினாக்களுக்கு விடையாக அமைதல்.
- அல்லாஹ்வின் நாட்டமும், திட்டமும்.
- பௌதீக விடயங்களை எடுத்துக்காட்டி அல்லாஹ்வின் அத்தாட்சிகளை உறுதிப்படுத்துதல்.
- தஃவாபணியின் போது எதிர் நோக்கிய இன்னல்களில் இருந்து விருக்தி அடையாதிருந்து முன்னைய நபிமார்களின் வரலாறுகளை கூறல்.

இவை போன்ற விடைகள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(ii) அல்-குர்ஆனின் தொகுப்புப் பற்றிக் குறிப்பிட்டு, உஸ்மான் (ரலி) அவர்களது காலத்தில் மேற்கொள்ளப்பட்ட தொகுப்பின் நன்மைகள் **இரண்டினை** விளக்குக.

- நபியவர்களுக்கு வழங்கப்பட்ட வஹீ நபியவர்களின் முன்னிலையிலேயே ஸஹாபாக்கள் சிலரால் மனனம் செய்யப்பட்டும் எழுதப்பட்டும் பாதுகாக்கப்பட்டுள்ளது. நபியவர்களின் கடைசி ரமழானில் அல்குர்ஆன் முழுமையாக ஒரே ஒழுங்கில் ஜிப்ரீல் அலை அவர்களால் நபி அவர்களுக்கு எடுத்துக் காட்டப்படுள்ளது. நபியவர்கள் காலத்திலேயே அல்குர்ஆன் முழுவதும் ஓர் ஒழுங்கைப் பெற்றதால் அதனை அல்குர்ஆனின் முதல் தொகுப்பு என்பர்.
- கலீபா அபூபக்ர் ருழி காலத்தில் உமர் ருழி அவர்களின் ஆலோசனைக்கு ஏற்ப அல்குர்ஆனைப் பாதுகாக்கும் இரண்டாம் கட்ட முயற்சி இடம் பெற்றுள்ளது. அல்குர்ஆனை எழுத்துருப்படுத்துவதில் பல ஸஹாபாக்கள் பங்களிப்புச் செய்துள்ளனர்.
- கலீபா உஸ்மான் ருழி காலத்தில் ஹுதைபதுல் யமானி அவர்களின் முறைப்பாட்டை அடுத்து அல்குர்ஆனைத் திலாவத் செய்வதில் ஒருமுகப்பாடு பேணப்படும் விதத்தில் அல்குர்ஆன் தொகுப்பு மேற்கொள்ளப்பட்டுள்ளது
- இம்மூன்று கட்டங்களிலும் ஸைத் பின் ஸாபித் அவர்களின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாகும்

**உஸ்மான் ( றழி ) அவர்களது காலத்தில்**

- அல்குர்ஆன் ஒரே அமைப்பில் முழுமையாகவே எழுதப்பட்டமை
- அல்குர்ஆனை திலாவத் செய்வதில் ஒருமுகப்பாடு ஏற்படுத்தப்பட்டமை
- உஸ்மான் (றழி) அவர்களிடமிருந்து பெறப்பட்ட இறுதிப் பிரதிக்கு மாற்றமான முறையில் அமைந்திருந்த சகல பிரதிகளும் அழிக்கப்பட்டமை

இவை போன்ற விடைகள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(iii) போலி ஹதீஸ்கள் தோற்றம் பெற்றமைக்கான காரணிகள் **நான்கினைத்** தந்து, அவற்றுள் **இரண்டினைச்** சுருக்கமாக விளக்குக.

- அரசியல் காரணிகள்
- ஸிந்தீக்கள் எனப்பட்ட இஸ்லாத்தின் எதிரிகளின் திட்டமிட்ட நடவடிக்கைகள்
- மொழி, இனம், பிரதேசம், மத்ஹப், இமாம் முதலாம் விடயங்களில் காட்டப்பட்ட அதீத பற்று
- பொருளாதார நலன்
- பிக்ஹிலும் இல்முல் கலாமிலும் காட்டிய தீவிர ஈடுபாடு
- இஸ்லாம் பற்றிய அறியாமையும், இஸ்லாத்துக்கு நன்மை செய்யவேண்டுமென்ற ஆர்வமும்

இவற்றுள் ஏதாவது இரண்டை சுருக்கமாக விளக்குதல்..... **(04 புள்ளிகள்)**

(iv) சமய, சமூக நல்லிணக்கம் தொடர்பாக நபியவர்களின் வழிகாட்டல்கள் **நான்கினை** உதாரணங்களுடன் விளக்குக.

- மனிதர்கள் அனைவரையும் ஒரே குடும்பமாக எடுத்துக் காட்டல்
- மனிதன் கண்ணியத்துக்கு உரியவன் என்பதை எடுத்துக் காட்டல்
- பிற சமூகங்களுடன் ஒப்பந்தங்களை ஏற்படுத்தி சமய, சமூக நல்லிணக்கத்தை கருத்தில் கொண்டதாய் உடன்படிக்கைகள் மேற்கொள்ளப்பட்டமை
- பிற சமூக உறுப்பினர்களுடன் பொருளாதார ரீதியான உறவுகளைப் பேணியமை
- சமய, சமூக, இனரீதியான வேறுபாடுகளின்றி சகலரையும் நீதியாக நடாத்தியமை
- ஒப்பந்தங்களில் உள்வாங்கப்பட்ட சமய, சமூக நல்லிணக்கம் தொடர்பான விடயங்களை நடைமுறைப்படுத்தியமை
- பிற சமூகத்துடன் பரஸ்பரம் அன்பளிப்புப் பொருட்களைப் பரிமாறிக் கொண்டமை
- சமாய வேறுபாடுகளின்றி தேவையுடையோருக்கு உதவி ஒத்தாசைகள் வழங்கியமை

இவை போன்ற விடைகள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(v) நீர் வாழும் சூழலில் சமய நல்லிணக்கத்தை உறுதிப்படுத்துவதற்காக மேற்கொள்ளக்கூடிய நடவடிக்கைகள் **நான்கினைத்** தெளிவாக விளக்குக.

- பிற சமூகத்தாரின் இன்ப, துன்பங்களில் கலந்துகொள்ளல்
- முஸ்லிம்களின் வைபவங்களுக்கு பிறசமயத்தவர்களை அழைத்தலும், பிறசமயத்தவர்களது வைபவங்களில் கலந்து கொள்ளலும்
- சிரமதானம், இரத்த தானம், மருத்துவ முகாம் போன்ற பொது நிகழ்வுகளில் பல சமயத்தவர்களையும் அழைத்தலும் அவர்களுடன் கலந்து செயற்படுதலும்
- அனர்த்தங்களின் போது மனிதநேயத்தோடு உதவுதலும் நிவாரண உதவிகளை வழங்குதலும்
- இஸ்லாம் கூறும் ஜீவகாருண்யம் தொடர்பான ஒழுக்கங்களை பேணுதல்
- போதைப் பொருள் ஒழிப்பு, சுற்றாடல் பாதுகாப்பு நடவடிக்கைகள், சமூக விரோதச் செயல்கள் போன்ற பொது வேலைத் திட்டங்களில் இன, மத, பிரதேச, மொழி வேறுபாடின்றி பங்கேற்றல்
- பல்லின சமூகத்தினர் ஒன்றுகூடும் பொது நிகழ்வுகள், வைபவங்களில், தனித்துச் செயற்படாது சகலரோடும் கலந்து செயற்படுதல் பழகுதல்
- நாட்டுப் பற்றையும் தேசிய நலனையும் வெளிப்படுத்தும் வகையில் நடந்து கொள்ளல்
- தேசிய விடயங்கள் தொடர்பான கலந்துரையாடல்களில் ஈடுபடல்

இவை போன்ற விடைகள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

**வினா இல: (02)**

2. (i) ஒரு தனிமனிதன் தனக்கும் தன் இரட்சகனுக்குமிடையே தொடர்பைப் பலப்படுத்திக் கொள்வதால் ஏற்படும் நன்மைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

- படைப்பாளனுடனான உறவு பலம் பெறல்
- உள்ளத்தில் நம்பிக்கை உருவாகுதல்
- பொறுமையும் மன ஆறுதலும் கிடைக்கப் பெறல்
- துணிவும் தைரியமும் ஏற்படல்
- மனச் சோர்வும் விரக்தியும் நீங்குதல்
- நன்மைகள் செய்வதில் ஆர்வம் ஏற்படல்
- பாவங்கள் செய்வதில் வெறுப்பு ஏற்படல்
- உறவுகளைச் சீராக்குதல்

இவை போன்ற நான்கு விடயங்களினை குறிப்பிட்டு விளக்குதல் **(04 புள்ளிகள்)**

(ii) மனித சட்டத்துக்கும் இறை சட்டத்துக்குமிடையிலான வேறுபாடுகள் **நான்கினைக்** குறிப்பிட்டு. அவற்றுள் **இரண்டினை** விளக்குக.

| இறை சட்டம் | மனித சட்டம் |
|---|---|
| • இறை சட்டங்கள் ,அனைத்தையும் அறிந்த அல்லாஹ்வினால் ஏற்படுத்தப்பட்டவை | பலவீனமான மனிதனால் உருவாக்கப்பட்டவை |
| • இறை சட்டங்கள் எக்காலத்துக்கும் எச்சந்தர்ப்பத்துக்கும் ஏற்புடையதாகக் காணப்படல் | குறிப்பிட்ட காலத்துக்கும் குறிப்பிட்ட பிரதேசத்துக்கும் ஏற்புடையதாகக் காணப்படுதல் |
| • நெகிழும் நெகிழாத் தன்மை கொண்டதாய் சட்டங்கள் அமைந்துள்ளமை | அனைத்து சட்டங்களும் நெகிழ்ச்சி உடையதாய் காணப்படுதல் |
| • இம்மை, மறுமை வெற்றியை இலக்காகக் கொண்டிருத்தல் | இம்மை வெற்றியை மட்டுமே இலக்காகக் கொண்டிருத்தல் சட்ட |
| • சட்ட மீறலில் இம்மை மறுமை தண்டனை கிடைக்கும் | மீறலின்போது இம்மைத் தண்டனை மட்டுமே |
| • நக்லிய்யா, அக்லிய்யா இரண்டுடனும் சம்பத்தப்பட்டது | அக்லிய்யாவோடு மாத்திரம் சம்பத்தப்பட்டது |

இவற்றுள் இரண்டினைச் சுருக்கமாக விளங்கப்படுத்தல் வேண்டும் **(04 புள்ளிகள்)**

(iii) மகாஸிதுஷ் ஷரீஆவின் ழரூரிய்யாத் பகுதியில் உள்ளடங்கும் **ஆறு** அம்சங்களையும் குறிப்பிட்டு. அவற்றுள் **இரண்டினை** விளக்குக.

- மார்க்கத்தைப் பாதுகாத்தல் (தீன்)
- உயிரைப் பாதுகாத்தல் (நப்ஸ்)
- புத்தியைப் பாதுகாத்தல் (அக்ல்)
- பரம்பரையைப் பாதுகாத்தல் (நஸ்ல்)
- மானத்தைப் பாதுகாத்தல் (இர்ழ்)
- செல்வத்தைப் பாதுகாத்தல் (மால்)

இவற்றுள் ஏதேனும் இரண்டை விளக்கி எழுதுதல் வேண்டும் **(04 புள்ளிகள்)**

(iv) கியாஸ் சட்ட மூலாதாரத்தின் **நான்கு** அடிப்படைகளையும் குறிப்பிட்டு, அவற்றுள் **இரண்டினை** உதாரணங்களுடன் விளக்குக.

- **அல் அஸ்ல்** :- முதற் பொருள் அல்லது அல்குர் ஆன், ஸ/ன்னா தீர்வு கூறிய விடயம்
- **அல் பர்உ** :- கிளைப் பிரச்சினை அல்லது தீர்வை வேண்டி நிற்கும் பிரச்சினை
- **அல் இல்லத்** :-சட்டத்தைப் பெறுவதற்கு துணை நின்ற காரணி அல்லது பொதுத் தன்மை
- **அல் ஹுகும்** :- தீர்வு அல்லது இஸ்லாமிய சட்டம்

இவை போன்ற... **(04 புள்ளிகள்)**

(v) தபஉத்தாபிஈன்கள் கால தப்ஸீர் துறைப் பங்களிப்பை மதிப்பீடு செய்க.

- இக்காலப் பிரிவு அனைத்து இஸ்லாமியக் கலைகளிலும் ஒரு பொற்காலமாகக் கருதப்படுகின்றது)
- இக்காலப் பிரிவில் தப்ஸீர் மஃஸூர், தப்ஸீர் மஃகூல் இரண்டும் அறிமுகமாகி வளர்ச்சி கண்டமை
- ஹதீஸ் தொகுப்பின் ஒரு பகுதியாக தப்ஸீர் இருந்தமை (கிதாபுத் தப்ஸீர்) இப்னு ஹாரூன் அஸ்லமி ஹிபத் இப்னு ஹஜ்ஜாஜ்
- ஹிஜ்ரி 1ம் நூற்றாண்டின் இறுதிக் காலப் பகுதியிலேயே தப்ஸீர் கருத்துக்கள் நூல் வடிவம் பெற ஆரம்பித்தமை. உ.ம் - ஸஈத் பி ஸ/பைர் ரழி
- ஹிஜ்ரி 2ம் நூற்றாண்டில் தப்ஸீர் கருத்துக்களை ஒன்று திரட்டும் பணி பரவலாக மேற்கொள்ளப்பட்டமை.
- ஹிஜ்ரி 3ம் நூற்றாண்டில் தர்தீபுத் திலாவத் ஒழுங்கில் தப்ஸீர் கருத்துக்கள் தொகுக்கப்பட்டமை
- மஃஸூர் வகைத் தொகுப்புக்களைக்கொண்ட தப்ஸீர்கள் தோற்றம் பெற்றமை.
  உ + ம்: தப்ஸீருல் குர்ஆனில் அழீம்,துர்ருல் மன்ஸூர் பித் தப்ஸீர்
- மஃகூல் வகையான தப்ஸீர்கள் தோற்றம் பெற்று வளர்ச்சி அடைந்தமை
  ( "தப்ஸீர் பிர்-ரஃயி" )

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின். **(04 புள்ளிகள்)**

**வினா இல: (03)**

**3.** (i) முஸ்லிம்கள் வானியல் துறையில் ஈடுபடுவதற்கு ஏதுவாய் அமைந்த காரணிகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

- இஸ்லாத்துக்கு முற்பட்ட காலம் முதலே அரேபியர் வாழ்வு வானியல் துறையோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தமை
- அல்குர்ஆனில் வானியலோடு தொடர்பான விடயங்கள் எடுத்தாளப்பட்டுள்ளமை. (50:06), (06:97)
- இஸ்லாத்தின் கடமைகள் சில வானியலோடு தொடர்புறுகின்றமைஆட்சியாளர்களின் ஒத்துழைப்பு (கலீபா ஹாரூன், மாமூன்...)
- இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் விரிவாக்கம் (பிரதேச வானியல் விடயங்களை கற்றுக் கொள்ள வாய்ப்பு ஏற்பட்டமை)
- தாருல் ஹிக்மவில் மேற்கொள்ளப்பட்ட நூல் மொழி பெயர்ப்புப் பணி

இவற்றுள் 4 விடயங்கள் குறிப்பிடப்பட்டிருப்பின்... **(04 புள்ளிகள்)**

(ii) மருத்துவத்துறையில் முஸ்லிம்களது கண்டுபிடிப்புகள் **நான்கினைக்** குறிப்பிட்டு, அவற்றுள் **இரண்டினைச்** சுருக்கமாக விளக்குக.

- கிரேக்க மருத்துவ நூல்களை மொழி பெயர்த்தது மட்டுமன்றி தமது ஆராய்ச்சிகள் மூலம் அந்நூல்களில் காணப்பட்ட தவறான கருத்துக்களைச் சுட்டிக்காட்டி சரியான விளக்கங்களை வழங்கியுள்ளமமை
- யூனானி மருத்துவ முறையை அறிமுகப்படுத்தியமை
- சத்திர சிகிச்சையின் போது பயன்படுத்தும் மயக்க மருந்தை அறிமுகப்படுத்தியமை...
  ”முஸ்லிம்கள் மருத்துவத் துறையில் பெரும்பெரும் முன்னேற்றங்களை ஏற்படுத்தினர். அவர்களது சிகிச்சை முறைகளுள் பல இன்னும் புழக்கத்தில் இருக்கின்றன. சத்திர சிகிச்சையின் போது முதன் முதலில் மயக்க மருந்தை இவர்களே பாவித்தனர்.” – H.G. Wells
- ஐரோப்பியருக்கு முன்னரே நோய்த்தடுப்பு முறைகள் பலவற்றைக் கண்டறிந்து உலகிற்கு அறிமுகம் செய்துள்ளமை. ஐழெஉரடயவழைெ எனப்படும் கிருமி புகுத்தல், அம்மை குத்தும் Vaccination முறை கி.பி. 1679ல் துருக்கிய முஸ்லிம்களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.
- ஒளியுடன் சம்பந்தப்படும் போதே கண், பார்வையைப் பெற்றுக் கொள்ளும் என்ற கருத்தை முன்வைத்தமை
- சத்திர சிகிச்சைக் கருவிகளையும் முறையினையும் அறிமுகப்படுத்தியமை (ஸீஸர் வெட்டு, கண் அறுவைச் சிகிச்சை...)
- சின்னம்மை, பெரியம்மை என்பவற்றுக்கிடையேயான வித்தியாசத்தைக் கண்டு பிடித்து அறிமுகப்படுத்தியமை,

இவற்றுள் இரண்டினை சுருக்கமாக விளக்குதல் **(04 புள்ளிகள்)**

(iii) மு'.தஸிலாக்களின் **நான்கு** பிரதான கோட்பாடுகளைக் குறிப்பிட்டு, அவற்றுள் **இரண்டினை** விளக்குக.

- அத்தௌஹீத்
- அல் அத்ல் (நீதி)
- இரு நிலைகளுக்கு இடைப்பட்ட நிலை(அல் மன்ஸிலது பைனல் மன்ஸிலதைன்)
- வாக்குறுதியும் தண்டனையும் (அல் வஃது வல் வஈத்)
- நன்மையை ஏவித் தீமையைத் தடுத்தல் (அம்ரு பில் மஃரூப் வன்னஹீ அனில் முன்கர்)

இவற்றுள் இரண்டை விளக்கி இருப்பின் **(04 புள்ளிகள்)**

(iv) பைதுல் ஹிக்மா, அறிவியல் துறைக்கு ஆற்றிய பங்களிப்புக்களைக் குறிப்பிட்டு, அவற்றுள் **ஒன்றினை** மதிப்பீடு செய்க.

**அவற்றுள் ஒன்றை மதிப்பீடு செய்க.**

- கலீபா மன்ஸூர் காலத்தில் தாருல் ஹிக்மா ஆரம்பிக்கப்படல்
- கலீபா ஹாரூனின் காலத்தில் தாருல் ஹிக்மா பைத்துல் ஹிக்மாவாவாக மாற்றியமைக்கப்பட்டமை
- கலீபா மாமூன் அதனை விரிவாக்கம் செய்தமை
- பைத்துல் மாலில் பின்வரும் முக்கிய விடயங்கள் இடம் பெற்றமை
  1. நூல் மொழி பெயர்ப்பு
  2. நூலாக்கம்
  3. வானியல் ஆராய்ச்சி

மேலே உள்ளவற்றுள் ஏதாவது ஒன்றுக்கு மாத்திரம் விளக்கம் எழுதி இருப்பின் **(04 புள்ளிகள்)**

(v) ஷீஆக்களின் **நான்கு** உப பிரிவுகளைக் குறிப்பிட்டு, அவற்றுள் **இஸ்னா அஷரியாக்கள்** பற்றிச் சுருக்கமாக விளக்குக.

- இஸ்னா அஷரிய்யா
- கைஸானிய்யா
- பத்ஹிய்யா
- வாகியிய்யா
- நுஸைரிய்யா
- ஸைதிய்யா
- இஸ்மாயீலிய்யா

**இஸ்னா அஷரிய்யா**

- 12 இமாம்களைப் பின்பற்றுவதனால் இவர்கள் இவ்வாறு அழைக்கப்படுகின்றனர்.
- இவர்கள் இமாமிய்யாக்கள் எனவும் அழைக்கப்படுகின்றனர்.
- இவர்கள் இமாம்களை மஃஸூம்கள் என அழைக்கின்றனர்.
- இமாமத், இஸ்மத், தகிய்யா எனும் பிரதான கோட்பாடுகளை இவர்களும் ஏற்றுக்கொள்கின்றனர்
- முன்னைய முதல் மூன்று கலீபாக்களையும் சில ஸஹாபாக்களையும் குறிப்பாக ஆய்ஷா (ரழி) அவர்களையும் மிக மோசமாக விமர்சிக்கின்றனர்
- ஹதீஸ் விடயத்தில் அஹ்லுல் பைத்துகள் சார்ந்த ரிவாயத்துகளையே ஆதாரமாகக் கொள்வர்
- இன்று நடைமுறையில் உள்ள அல்குர்ஆன் உண்மையானது அல்ல என்றும் உண்மையான குர்ஆன் இமாமுல் காஇபிடம் இருப்பதாகவும் கூறுவர்.

**(04 புள்ளிகள்)**

# பகுதி II

**வினா இல: (04)**

**4.** (i) 'இஜ்திஹாத், சட்டம் பெறுவதற்கான ஒரு வழிமுறையாகும்' என்பதை அல்-குர்ஆன், அல் - ஹதீஸ் ஆதாரங்களுடன் விளக்குக.

- வரைவிலக்கணம்
- அல்குர்ஆன் ஆதாரம்:
  "அல்லாஹ் உமக்கு வழிகாட்டித் தந்ததன் பிரகாரம் மக்களுக்கு மத்தியில் தீர்ப்பளிப்பதற்காக சத்தியத்தைக் கொண்டுள்ள இவ்வேதத்தை நாமே உம்மீது இறக்கி வைத்தோம்". (4:105)
  "அன்றியும் தம் காரியங்களை தம்மிடையே கலந்தாலோசித்துக் கொள்வர்." (42:38)
- ஹதீஸ் ஆதாரம்:
  "ஒரு முஜ்தஹித் தனது அறிவைப் பயன்படுத்தி எடுக்கும் தீர்வு சரியாக அமைந்தால் இரு நன்மைகளும் தவறாக அமைந்தால் அதற்கு ஒரு நன்மையும் கிடைக்கும்" (புஹாரி, முஸ்லிம்)
- நபித்தோழர் முஆத் இப்னு ஜபல் (றழி) அவர்களை யமனுக்கு கவர்னராக அனுப்பும் போது இடம் பெற்ற உரையாடல்
- ஒரு பிரயாணத்தில் ஈடுபட்டிருந்த இரு நபித் தோழர்கள் தண்ணீர் கிடைக்காமை காரணமாக தயம்மும் செய்த சம்பவம்
- பனூ குறைழா சம்பவம்...

இவை போன்ற... **(10 புள்ளிகள்)**

(ii) இஸ்லாமிய நாகரிகம் தேக்கமடைந்தமைக்கான காரணிகள் **ஐந்தினைக்** குறிப்பிட்டு, அவற்றை விளக்குக.

- இஸ்லாம் பற்றிய தெளிவின்மை
- இஸ்லாத்தை அதன் முழு மொத்த வடிவில் நோக்காது சில சடங்கு சம்பிரதாயங்களோடு மாத்திரம் சுருக்கிக் கொண்டமை
- பொருளாதார வளங்கள் சரியாகப் பயன்படுத்தப்படாமையும் ஆட்சியாளரின் நலனுக்காக அவற்றைப் பயன்படுத்தியமையும்
- இஸ்லாமியப் பொருளாதார வழிகாட்டலைப் புறக்கணித்தமையும், அதுபற்றிய தெளிவின்மையும்
- பலவீனமான ஆட்சியாளர்கள் பதவிக்கு வந்தமை
- முஸ்லிம்களுக்கு மத்தியில் சமூக, அரசியல் ரீதியான பிரிவுகளும் பிளவுகளும் தோற்றம் பெற்றமை
- இஸ்லாத்தின் எதிரிகளின் திட்டமிட்ட சதி நடவடிக்கைகள்
- முஸ்லிம்கள் அறிவாராய்ச்சித் துறையைக் கைவிட்டு, இஸ்லாம் முக்கியத்துவம் கொடுக்காத சில்லறை விடயங்களில் மிதமிஞ்சிய ஆய்வுகளில் ஈடுபாடு காட்டியமை
- ஐரோப்பாவின் அரசியல் எழுச்சியும் ஸ்திரப்பாடும்
- கிலாபத் ஒழிக்கப்பட்டமை
- முன்னைய பரம்பரையினரின் கருத்துக்களைப் புனிதமானவையாக,அவை விமர் சனத்துக்கு அப்பாற்பட்டவையாகக் கருதி அவற்றை முழுமையாக ஏற்றுக்கொண்டமை
- கற்பனா உலகில் சஞ்சரித்து நிஜ உலகில் நடைபெற முடியாத பிரச்சினைகளில் மூழ்கியமை
- இஸ்லாமிய சட்ட விதிகளிலிருந்து சட்டபூர்மாக நழுவிச் செல்வதற்கு வசதியாக உத்திகளைக் கண்டு பிடித்துச் செயற்படுத்த முனைந்தமை.
- மத்ஹபுகள் மீதான அதீத பற்றும் நான்கு மத்ஹபுகள் தவிர்ந்த ஏனைய மத்ஹபுகள் தடை செய்யப்பட்டவை எனும் நம்பிக்கை சமூகத்தின் மத்தியில் பரவலாக வலுத்தமை

இவை போன்ற ஐந்து விடயங்களைக் குறிப்பிட்டு விளக்கியிருப்பின் **(10 புள்ளிகள்)**

**வினா இல: (05)**

5. (i) உமையா கிலாபத்தை ஸ்திரப்படுத்துவதில் கலீபா முஆவியா (ரலி) மற்றும் கலீபா அப்துல் மலிக்கின் செயற்பாடுகளை ஒப்பிடுக.

**கலீபா முஆவியா (ரழி) அவர்கள்**

- சிதைந்து போக இருந்த இஸ்லாமிய கிலாபத்தை ஒரு தலைமைத்துவத்தின் கீழ் கொண்டு வந்தமை
- உள் நாட்டு, வெளி நாட்டு எதிரிகளின் அச்சுறுத்தல்களில் இருந்து ஆட்சியைப் பாதுகாத்தமை (ஷீஆ, கவாரிஜ், உரோமர்)
- பல்வேறு நிருவாக சீர்திருத்தங்களை மேற்கொண்டமை
- திறமையான தளபதிகளையும், கவர்னர்களையும் நியமித்தமை
- டமஸ்கஸைத் தலை நகராக்கியமை

**கலீபா அப்துல் மலிக் அவர்கள்**

- உமையா ஆட்சி பல்கோணச் சிக்கல்களை எதிர் நோக்கி இருந்தமை (அப்துல்லாஹ் பின் ஸ/பைர், காலித், முக்தார்...)
- அவற்றை வெற்றிகரமாக முறியடித்து கிலாபத்தை நிலைப்படுத்தியமை
- பல்வேறு சீர்திருத்தங்களை மேற்கொண்டமை (அரபு மொழி அரச கரும மொழி, நாணய வெளியீடு)

  - கலீபா முஆவியா (றழி) அவர்கள் உமையா ஆட்சியைத் தோற்றுவித்த முதல் நிர்மாணியாகவும், கலீபா அப்துல் மலிக் பின் மர்வான் உமையா ஆட்சியின் 2வது நிர்மாணியாகவும் கருதப்படுகின்றமை.

இவை போன்ற கருத்துக்கள் குறிப்பிடப்பட்டிருப்பின்... **(10 புள்ளிகள்)**

(ii) உமையாக்களிடமிருந்து அப்பாஸியரிடம் ஆட்சி மாறியதை அடுத்து ஏற்பட்ட மாற்றங்களைப் பரிசீலிக்குக.

- உமையா ஆட்சியின் செல்வாக்கு குறைந்து அப்பாசியர் ஆட்சியின் செல்வாக்கு அதிகரிக்க ஆரம்பித்தமை
- அரபு அல்லாதவர்களுக்கும் தகைமைகளின் அடிப்படையில் முன்னுரிமை வழங்கப்பட்டமை
- பாரசீகர்களின் செல்வாக்கு மேலோங்கியமை
- உமையா அட்சியில் இஸ்லாமியக் கலைகளும் ஏனைய அறிவியல் கலைகளும் தனிமனித முயற்சியின் ஊடாக வளர்ச்சி அடைய, அப்பாசிய ஆட்சியில் அரச ஆதரவுடன் அறிவியல் கலைகள் வளர்சியுற்றமை
- சிற்றரசுகள் தோற்றம் பெற்றமை
- தீவான்களுக்க மேலதிகமாக வஸீர், ஹாஜிப் அறிமுகமாகியமை
- பக்தாத் தலை நகராக உருவாக்கப்பட்டமை

**(10 புள்ளிகள்)**

**வினா இல: (06)**

**6.** (i) கருத்து வேறுபாடுகள் தோற்றம் பெறுவதற்கான காரணங்களைச் சுருக்கமாகக் குறிப்பிட்டு, கருத்து வேறுபாட்டின்போது பேணவேண்டிய ஒழுங்குகளைப் பரிசீலிக்குக.

- சட்ட வசனத்தை (நஸ்ஸின்) விளக்குவதில் ஏற்படும் கருத்து வேறுபாடு
- ஒரு குறிப்பிட்ட ஹதீஸை உறுதிப் படுத்துவதில் உண்டாகும் கருத்து வேறுபாடு
- முரண்பட்ட சட்ட வசனங்களிடையே இணக்கம் காண்பதிலும் அவற்றில் ஒன்றை உறுதிப்படுத்துவதிலும் ஏற்படும் வேறுபாடு
- சட்டவாக்க மூலாதார விதிகளில் காணப்பட்ட கருத்து வேறுபாடு
- சட்டத்தை நடைமுறைப்படுத்துவதில் ஏற்படும் கருத்து வேறுபாடு

**ஒழுங்குகள்**

- கருத்தொற்றுமையான விவகாரங்களில் பரஸ்பரம் ஒத்துழைத்தல்
- கருத்து வேறுபாடு கொண்ட விடயங்களில் விட்டுக் கொடுப்புடன் நடந்து கொள்ளல்
- ஒருவரை ஒருவர் சாடாது மதித்து நடத்தல். அறிஞர்களையன்றி கருத்துக்களை விமர்சித்தல்.
- ஒரு மத்ஹப்பின் அல்லது ஒரு முகாமின் அல்லது தனிமனிதனின் கருத்தில் பிடிவாதப் போக்கைத் தவிர்த்தல்
- அடுத்தவர் பற்றிய நல்லெண்ணெத்தை வளர்த்துக் கொள்ளல்
- விவாதங்களை முடிந்தளவு தவிர்த்துக் கொள்ளல்
- மார்கத்தைப் பின்பற்றுவதில் நடுநிலைப் போக்கை பின்பற்றுதல்
- கலைச் சொற்களின் கருத்துக்களை அறிந்து பயன்படுத்துதல்
- இஜ்திஹாத்துக்குரிய விடயங்களில் வலியுறுத்தலைத் தவிர்த்துக் கொள்ளல்
- அடுத்தவர் கருத்தை முழுமையாக செவிமடுத்தல்

இது போன்ற காரணங்களையும் ஒழுங்குகளையும் குறிப்பிட்டு விளக்கி இருந்தால் **(10 புள்ளிகள்)**

(ii) கலீபா உஸ்மான் (ரலி) கிலாபத்துக்குத் தெரிவு செய்யப்பட்ட முறையைக் குறிப்பிட்டு, அவரது சேவைகளை மதிப்பீடு செய்க.

- இரண்டாம் கலீபா உமர்(ரழி) அவர்கள் தனக்குப் பின் கிலாபத்தை கொண்டு நடத்துவதற்கான தகைமை உடைய பலரை இனங்கண்டமை
- ஆறு பேர் கோண்ட ஒரு குழுவை நியமித்தல் (உஸ்மான்(ரழி),அலி(ரழி), தல்ஹா(ரழி),சுபைர்(ரழி), அத்துர்றஹ்மான் இப்னு அவ்ப்(ரழி), ஸஃத் இப்னு அபி வக்காஸ்(ரழி))
- அப்துல்லா இப்னு உமரை (ரழி) நடுவராக அமைந்தமை
- அப்துர்ரஹ்மான் இப்னு அவ்ப்(ரழி)கிலாபத் போட்டியில் இருந்து விலகிக் கொண்டமையும் அவரிடம் ஏனைய உறுப்பினர்களில் இருந்து ஒருவரை தெரிவு செய்யும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டமையும்
- அப்துர்ரஹ்மான் இப்னு அவ்ப்(ரழி) இரகசியமாக ஸஹாபாக்கள் மத்தியில் கருத்துக் கணிப்பை மேற்கொண்டமை
- இறுதியாக உஸ்மான்(ரழி) கலீபாவாதல்

**சேவைகள்:**

- உமர்(ழ்) அவர்கள் விட்டுச் சென்ற இடத்தில் இருந்து இஸ்லாமிய கிலாபத்தை சிறப்பாக நடாத்திச் சென்றமை
- இஸ்லாமிய சாம்ராஜ்சியத்தை மேமும் விரிவாக்கியமை (ஆர்மேனியா,சமர்கந், போன்ற மத்திய ஆசியப் பிரதேசங்கள்)
- கடற் படை ஒன்றை உருவாக்கி. மத்திய தரைக் கடலின் ஆதிக்கத்தை முஸ்லிம்களின் கீழ் கொண்டு வந்தமை
- அல்குர்ஆனை நூலுருப் படுத்தி அனைவரும் ஒரே அமைப்பில் ஓதுவதற்கான வழிவகைகளை மேற்கொண்டமை(ஜாமிஉல் குர்ஆன்)

இவை போன்ற கருத்துக்கள் குறிப்பிடப்பட்டிருப்பின் **(10 புள்ளிகள்)**

**வினா இல: (07)**

7. (i) இலங்கையில் ஆரம்பகால முஸ்லிம் குடியிருப்புக்கள் கரையோரங்களில் ஏற்பட்டமைக்கான காரணங்களைத் தந்து, அவற்றுள் இரு குடியிருப்புக்களை ஆதாரபூர்வமாக விளக்குக.

- காரணங்கள்:
- இயற்கைத் துறைமுக வசதிகள்
  (கப்பல்களைப் பழுதுபார்ப்பது, ஊழிய வேவை பெறுவது, சாதகமான பருவக் காற்று ஏற்படும் வரை தரித்திருப்பது, நண்ணீர் பெறல்)
- கடல் வழியாக ஏற்படுகின்ற வெளிநாட்டு எதிர்ப்புக்களை தடுப்பதற்கு கரையோரத்தை கண்காணித்து நடவடிக்கை எடுத்தல்
- ஏற்றிறக்குமதி வர்த்தகத்துக்குத் தேவையான பண்டங்களைப் பெற்றுக்கொள்வதற்கான வாய்ப்பு கிடைக்கப் பெறல்
- கரையோரத்தில் வாழ்ந்த சுதேசப் பெண்களைத் திருமணம் செய்தமை
- கரையோர நகரங்கள்: (வெலிகம, காலி, கொழும்பு, புத்தளம்....)

**குடியிருப்புக்கள்:**

1. கொழும்பு : – காலித் பின் பகாயாவின் மண்ணறைக் கல்வெட்டு , ஹிஜ்ரி 317
2. கொழும்பு :– ஜலஸ்தி பற்றிய தகவல்
3. மாந்தை: : – திருக்கேதீஸ்வரம்,எல்லுப்பிட்டிய, புளியந்தீவு முதலாம் இடங்களில் கண்டெடுக்கப்பட்ட அரபு சிலாசனங்கள்
4. பேருவலை: – மண்ணறைக் கல்வெட்டு, கோயாஜான் பற்றிய தகவல்

இவை போன்ற கருத்துக்கள் குறிப்பிடப்பட்டிருப்பின் **(10 புள்ளிகள்)**

(ii) இலங்கையின் இறைமையைப் பாதுகாப்பதில் முஸ்லிம்கள் வழங்கியுள்ள பங்களிப்புக்களை மதிப்பீடு செய்க.

**பங்களிப்புக்களை மதிப்பீடு செய்க.**

- இராணுவத் தளபதிகளாகக் கடமையாற்றியுள்ளமை
  தம்மதெனிய அரசியலில் கி.பி.1270ல் இராணுவத் தளபதியாகப் பணி புரிந்த முஸ்லிம் தளபதி தாஹுர், அவ்வாண்டு உருவாகிய கிளர்ச்சியை அடக்கி, 1272ல் 1ம் புவனேகபாகுவை யாப்பஹுவாவில் ஆட்சியாளராக அமர்த்தியமை

- மாயாதுன்னையின் ஆட்சியின் போது போர்த்துக்கேயருக்கு எதிராக மாயாதுன்னையின் இராணுவத்தில் இணைந்து முஸ்லிம்கள் போராடியமையும், கள்ளிக்கோட்டை மன்னன் சாமோரினின் உதவியைப் பெற்றுக் கொடுக்க வழி செய்தமையும்
- கண்டி மன்னன் 1ம் விமலதர்ம சூரியனின் காலத்தில் கரையோரப் பாதுகாப்புத் தளபதியாகவும், பிரதான கட்டளை அதிகாரியாகவும் ஒரு முஸ்லிம் பணியாற்றியமையும் இவர் போர்த்துக்கேயரால் கைது செய்யப்பட்ட போது அவரை விடுவிக்க 5000 வெள்ளி நாணயங்களை வழங்க மன்னன் முன்வந்தமையும்
- கி.பி. 1810ல் தேசிய இராணுவத்தில் 850 முஸ்லிம் வீரர்கள் இடம்பெற்றிருந்தமை
- வெளி நாட்டுப் படையெடுப்புக்களின் போது அரசுக்கு உதவியாக பொதுவாக முஸ்லிம்கள் செயற்பட்டுள்ளமை
- நம் நாட்டின் இறைமைக்கு எதிராக அண்மைக் காலத்தில் ஜெனீவா மாநாட்டில் கொண்டுவரப்பட இருந்த ஒரு தீர்மானத்தை இலங்கை முஸ்லிம் பிரதி நிதிகள் சாதுரியமாகத் திசை திருப்பி விட்டமை
- நாட்டின் இறைமைக்கு பாதிப்பு ஏற்படக்கூடிய வகையில் ஆயுதமேந்திப் போராடுதல், அந்நிய நாடுகளுக்கு நம் நாட்டைக் காட்டிக் கொடுத்தல், தனி நாடு கோருதல் போன்ற நாட்டைக் குழப்பிவிடும் செயற்பாடுகளில் முஸ்லிம்கள் இன்று வரை ஈடுபடாது வாழ்ந்து வருகின்றமை

இவை போன்ற கருத்துக்கள் குறிப்பிடப்பட்டிருப்பின்... **(10 புள்ளிகள்)**

**வினா இல: (08)**

8. (i) பெண்களுக்கு இஸ்லாம் வழங்கியுள்ள கண்ணியம், பாதுகாப்புப் பற்றி விளக்குக.

**பெண்களின் கண்ணியம்**

- இஸ்லாத்திற்கு முற்பட்ட காலங்களில் பெண்கள் சமூக அந்தஸ்தோ கண்ணியமோ பெற்றவர்களாய் இருக்கவில்லை.
- பெண்களின் பிறப்பை அபசகுணமாகக் கருதிய சில கோத்திரங்கள் பெண் குழந்தைகளை உயிருடன் புதைத்தமை தவிர பெண்கள் வியாபாரப் பொருளாகவும் போகப் பொருளாகவும் கணிக்கப்பட்டமை
- இஸ்லாம் ஆண் பெண் இருபாலாரையும் சமமாகக் கருதியுள்ளமையும் அவர்களது உடல் உள வேறுபாடுகளுக்கேற்புடைய வகையில் பொறுப்புக்களை வழங்கியுள்ளமையும். (சொத்துரிமை,கல்வியிமை,பேச்சுரிமை, பிள்ளை வளர்ப்பு..)
- “நிச்சயமாக ஒரு காலம் வரும் அப்போது ஒரு பெண் பயம் அச்சமின்றி ஸன்ஆவிலிருந்து ஹழரமௌத் வரை தன்னந்தனியாகச் செல்வாள்” என்ற நபியவர்களின் கூற்று பெண்ணுக்கான பாதுகாப்பை விளக்குகிறது.
- ஒரு பெண் மகளாக இருக்கும் போதும் தந்தையின் பூரணபாதுகாப்பையும் சகோதரியாய் இருக்கும்போது சகோதரர்களின் பாதுகாப்பையும் மனைவியாய் இருக்கும்போது கணவனின் பாதுகாப்பையும் பெற்றுக்கொள்கின்றமை.
- ஒரு பெண் தாயாக மாறும்போது அவளது கண்ணியமும் பாதுகாப்பும் மேலும் உயர்கின்றமை. (தாயின் காலடியில் சுவர்க்கம் உள்ளது)

இவை போன்ற கருத்துக்கள் குறிப்பிடப்பட்டிருப்பின்.. **(10 புள்ளிகள்)**

(ii) ஒரு முஸ்லிம் பிற படைப்புகளுடன் பேணவேண்டிய ஒழுங்குமுறை பற்றி இஸ்லாத்தின் வழிகாட்டலை விவரிக்குக.

- இஸ்லாம் மனித வாழ்வுடன் தொடர்பான எல்லா விடயங்களுக்கும் வழிகாட்டுகின்ற மார்க்கம் என்ற வகையில் பிற படைப்புக்களுடன் பேணவேண்டிய ஒழுங்கு முறை பற்றி வழிகாட்டியுள்ளமை.
- இஸ்லாம் சகல படைப்புக்களையும் அல்லாஹ்வின் குடும்பமாக கருதியுள்ளமை.
  (அல் ஹல்கு குல்லுஹும் இயாலுல்லாஹ்)
- இறை படைப்புக்கள் அணைத்தின் மீதும் அன்பு காட்டுமாறு போதித்துள்ளமை.
- பூமியிலுள்ள அனைத்தும் மனிதர்களுக்காகவே படைக்கப்பட்டுள்ளன எனக் குறிப்பிடும் இஸ்லாம், மனிதன் புவியின் பிரதிநிதியாகவே புவியிலுள்ள வழங்களை பயன்படுத்தவும் பாதுகாக்கவும் மனிதனது உரிமையுடையவன்.எனக் குறிப் பிடுகின்றமை.
- மனிதன் பிற படைப்புகளுடன் பின்வரும் முறையில் செயற்பட வேண்டுமென வழிகாட்டல்களை வழங்கியுள்ளமை

**மனிதன் பிற படைப்புகளுடன் பேணவேண்டிய சில வழிகாட்டல்கள்**

1. படைப்பினங்களுக்கிடையே சூழல் சமநிலை பேணல்
2. வளங்களை அனுபவிப்பதில் சமநிலை பேணல்
3. வளங்களின் சொந்தக்காரன் அல்லாஹ் என்றவகையில் அல்லாஹ்வுக்கு நன்றியுள்ளவனாக இருத்தல்.

- உயிருள்ள படைப்புக்கள் விடயத்தில் மனிதன் நடந்து கொள்ளவேண்டிய முறை பற்றி தனியாக விளக்கியுள்ளமை.

1. உயிரினங்கள் மிது அன்பு செலுத்துவது
2. உயிரினங்களின் தேவைகளை புரிந்து முன்னுரிமை தருவது
3. உயிரினங்களிடம் வேலை வாங்கும்போது அதன் சக்திக்கேற்ப வேலை வாங்குவது

இவை போன்ற கருத்துக்கள் குறிப்பிடப்பட்டிருப்பின்.. **(10 புள்ளிகள்)**